| | | | |
|---|---|---|---|
| மா நிலை உடைய | சிறந்த தன்மையுடையரான | அது கொல்லை நிலம் ஆன நிலை கொண்டு | அந்த பாகவத சேஷத்வமே இதற்குமேல் இல்லையென்னலாம்படியான உத்தமபுருஷார்த்தமென்று கொண்டு. |
| பத்தர்க்கு அடிமை தனில் | பாகவதர்களுக்கு அடிமைப்படும் திறத்தில் | | |
| எல்லை நிலம் தான் ஆக மாறன் எண்ணினான் | சரமாவதி தாஸ்யம் தமக்கேயுள்ளதென்று ஆழ்வார் அத்யவஸாயங்கொண்டார்; (எதிலேயென்னில்) | | |

* * * கீழ்த்திருவாய் மொழியாலே * கருமாணிக்க மலையில் ஆத்மாவுக்குச் சொன்ன பகவதநந்யார்ஹத்வமான நிலை நிற்பது பாகவத சேஷத்வபர்யந்தமானால் என்றுபிட்டத்தை யநுஸந்தித்து "அவனுடைய ஸௌந்தர்ய சீலாதிகளில் தோற்று அடிமைபுக்கிருக்கும் பாகவதர்களுக்கு சேஷமாயிருக்குமிருப்பே எனக்குப் புருஷார்த்தம்" என்றறுதியிட்டு அந்தப் பரமார்த்தத்தை * நெடுமாற்கடிமை யெனும் பதிகத்திலே ஆழ்வாரருளிச் செய்தாரென்கை.

கொல்லை நிலம்—இதற்கு மேலாக வொரு நிலமில்லையென்னலாம்படி சரமாவதியான நிலமென்க.

இரண்டாமடியில் "பக்தர்" என்றே பாடம் வழங்கிவருகின்றது. 'பத்தர்க்கு' என்று ஸ்ரீகோசங்களிற் பெரும்பாலும் காண்கிற பாடம் மிக அழகியது. அதுவே கொள்ளத்தக்கது.
(அய)

கொண்டபெண்டிர் தாம்முதலாக் கூறுமுற்றார் கன்மத்தால் *
அண்டினவரென்றே யவரைவிட்டு —* தொண்டருடன்
சேர்க்கும் திருமாலைச் சேருமென்றான் * ஆர்க்குமிதம்
பார்க்கும் புகழ்மாறன் பண்டு.
(அக)

| | | | |
|---|---|---|---|
| ஆர்க்கும் இதம் பார்க்கும் புகழ் மாறன் | அனைவர்க்கும் ஹிதமே சிந்திக்கிற யசஸ்வியான நம்மாழ்வார் | அவரை விட்டு | அந்த ஔபாதிகபந்துக்களை விட்டு |
| பண்டு | முன்பு | | |
| கொண்ட பெண்டிர் தாம் முதலா கூறும் உற்றார் | மனைவி முதலாகச் சொல்லப்படுகிற பந்துவர்க்கமெல்லாம் | தொண்டருடன் சேர்க்கும் திருமாலை | நம்மை பாகவத கோஷ்டியிலே சேர்க்க வல்லவனான ஸர்வேச்வரனை |
| கன்மத்தால் அண்டினவர் என்றே | கர்மோபாதியாலே நெருங்குமவர்களத்தனை யென்று கொண்டு | சேரும் என்றான் | சேருங்கோளென்று உபதேசித்தார். |

* * * தன்னைப் பற்றினாரை பாகவதர்கள் திருவடிகளிலே சேர்த்து ரக்ஷிக்கவல்ல ஸர்வேச்வரனே ஸகலவிதபந்துவுமாவான்; அல்லாதாரடங்கலும் ஔபாதிகபந்துக்கள்; ஆனபின்பு ஔபாதிக பந்துக்களை விட்டு நிருபாதிக ஸகலவித பந்துவுமான ஸர்வேச்வரனுக்கு அடிமை செய்து உஜ்ஜீவியுங்கோளென்று, அனைவர்க்கும் ஹிதைஷியான ஆழ்வார் உபதேசித்தருளின பதிகம் * கொண்ட பெண்டிரென்பதாம்.
(அக)

பண்டையுறவான பரனைப் புளிங்குடிக்கே
கண்டு * எனக்கேல்லாவுறவின் காரியமும் —* தண்டறநீ
செய்தருளென்றே யிரந்த சீர்மாறன் தாளிணையே *
உய்துணையென் றுள்ளமேயோர்.
(அஉ)

| | | | |
|---|---|---|---|
| பண்டை உறவு ஆன பரனை | அநாதிஸித்தமான ஸம்பந்தத்தையுடையவனான பரமபுருஷனை | தண்டு அற நீ செய்தருள் என்று | தட்டில்லாமல் நீ செய்தருள வேணும்' என்று |
| புளிங்குடிக்கே கண்டு | திருப்புளிங்குடியிலே ஸேவித்து | இரந்த | ப்ரார்த்தித்த |
| எனக்கு | 'அடியேனுக்கு | சீர் மாறன் | ஆழ்வாருடைய |
| எல்லா உறவின் காரியமும் | ஸகலவிதமான உறவினுடையவும் காரியங்களை | தாள் இணையே | உபய பாதங்களை |
| | | உய் துணை என்று | நமக்கு உஜ்ஜீவனோபாயமென்று |
| | | உள்ளமே ஓர் | நெஞ்சே! நினை. |

* * * நிருபாதிக பந்துவான ஸர்வேச்வரனைத் திருப் புளிங்குடியிலே ஸேவித்து 'எனக்கு ஸகலவித பந்துக்ருத்யமும் நீ செய்தருளவேணும்' என்று ஆழ்வார் ப்ரார்த்தித்த படியைக்கூறுவதாம் * பண்டை நாளாலே பதிகம். * கோவைவாய் திறந்துன் தாமரைக் கண்களால் நோக்காய் * நின்பாதபங்கயமே தலைக்கணியாய் * என்றிப்படி பாசுரந்தோறும் ஒவ்வொரு வகையான ப்ரார்த்தனை யிருப்பது காண்க. தண்டு அற—தடையின்றிக்கே; அல்லது, காலதாமதமின்றி. (அஉ)

ஓரா நீர் வேண்டினவை யுள்ளதெல்லாம் செய்கின்றேன் *
நாராயணனன்றோ நானென்று —* பேருறவைக்
காட்டவவன் சீலத்தில் கால்தாழ்ந்த மாறனருள் *
மாட்டிவிடும் நம்மனத்து மை. (அங)

| | | | |
|---|---|---|---|
| நீர் ஓரா வேண்டினவை உள்ளது எல்லாம் | '(ஆழ்வீர்!) நீர் ஆராய்ந்து அபேக்ஷித்தவை யெல்லாவற்றையும் | பேர் உறவை காட்ட | தனது சிறந்த உறவையும் நினைப்பூட்டினவளவிலே |
| செய்கின்றேன் | நான் தலைக்கட்டித் தருகின்றேன்; | அவன் சீலத்தில் | அப்பெருமானது சீல குணத்திலே |
| நான் நாராயணன் அன்றோ என்று | நான் ஸர்வ சக்தனான நாராயணனன்றோ!' என்று (எம்பெருமான்) | கால் தாழ்ந்த | ஆழ்ந்துபட்ட |
| | | மாறன் அருள் | ஆழ்வாருடைய திருவருளானது |
| | | நம் மனத்து மை | நமது நெஞ்சிலுள்ள அஜ்ஞான இருளை |
| | | மாட்டி விடும். | மாளச் செய்துவிடும். |

* * * கீழ்த்திருவாய்மொழியாகிய * பண்டை நாளில் எனக்கெல்லாவுறவின் காரியமும் செய்தருளவேணுமென்று இரந்த ஆழ்வாரை நோக்கி 'ஆழ்வீர்! நீர் ப்ரார்த்திக்க வேணுமோ? நானே 'ப்ரார்த்திக்குச் செய்ய வேண்டும்படியன்றோ எனக்குண்டான நாராயணத்வப்ரயுக்தமான உறவுத் தொடர்ப்பு இருப்பது. ஆன பின்பு நானே உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் நிறைவேற்றிக் கொடுக்கின்றேன்' என்று எம்பெருமானருளிச் செய்ய, தன் பெருமை பாராதே என் சிறுமை பாராதே இப்படியருளிச் செய்வதே! இதொரு சீலகுணமிருக்கும்படியென்!' என்று அவனுடைய சீல குணத்திலே ஈடுபட்டுப் பேசினது * ஓராயிரமாய் பதிகம். (அங)

ஓரா—செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்.

மையார்கண் மாமார்பில் மன்னும் திருமாலை *
கையாழிசங்குடனே காணவெண்ணி — * மெய்யான
காதலுடன் கூப்பிட்டுக் கண்டுகந்த மாறன்பேர் *
ஓதவுய்யுமே யின்னுயிர். (அச)

| | | | |
|---|---|---|---|
| மை ஆர் கண் மா | மையணிந்த கண்களை யுடையவளான பெரிய பிராட்டியானவள் | மெய் ஆன காதலுடன் கூப்பிட்டு | உண்மையான அபிநிவேசத்தோடே கூவியழைத்து |
| மார்பில் மன்னும் | திருமார்பிலே நித்ய வாஸம் பண்ணப் பெற்ற | கண்டு உகந்த மாறன் பேர் ஓத | அவ்வாறு ஸேவித்து உள்ளம் பூரித்த ஆழ்வாருடைய திருநாமங்களை அநுஸந்திக்கவே |
| திருமாலை | எம்பெருமானை | | |
| கை ஆழி சங்குடனே காண எண்ணி | திருக்கை நிறைந்த திருவாழி திருச் சங்குகளுடனே ஸேவிக்க விரும்பி | இன் உயிர் உய்யும் | விலக்ஷணமான ஆத்ம வஸ்து உஜ்ஜீவிக்கும். |

* * * திருமார்பிலே பிராட்டி நிகழ நின்ற திருமாலைத் திருவாழி திருச்சங்குகளுடனே ஸேவிக்க ஆசைப்பட்டு ஆழ்வார் கூப்பிட, தூணிலே தோன்றிச் சிறுக்கனுக்கு உதவினாப் போலே எம்பெருமான் மானஸமாகத் தோற்றித் தன் குணங்களை யநுபவிப்பிக்க, அத்தை யநுபவித்து உகந்தபடியைக் கூறுவதாம் * மையார் கருங்கண்ணிப் பதிகம்.

மா—ஸ்ரீமஹா லக்ஷ்மி ; வட சொல். (௫௪)

இன்னுயிர்மால் தோற்றினதிங்கென்னெஞ்சிலென்று * கண்ணால்
அன்றவனைக் காணவெண்ணியாண்பெண்ணாய்—* பின்னையவன்
றன்னை நினைவிப்பவற்றால் தான்தளர்ந்த மாறனருள் *
உன்னுமவர்க்குள்ள முருகும். (௫௫)

| | | | |
|---|---|---|---|
| இன் உயிர் மால் | எனக்குத் தாரகனான எம்பெருமான் | ஆண் பெண் ஆய் | ஆண் தன்மை குலைந்து பெண் தன்மை யடைந்து |
| இங்கு தோற்றினது | இப்போது ஸேவை சாதித்ததானது | பின்னை அவன் தன்னை நினைவிப்பவற்றால் | மேலும் அப்பெருமானை நினைப்பூட்டுகின்ற மேகம் முதலியவற்றால் |
| என் நெஞ்சில் என்று | எனது நெஞ்சிலேயன்றி ப்ரத்யக்ஷமாக வில்லையே' என்று (வருந்தி) | தான் தளர்ந்த | தளர்ச்சியடைந்த |
| அன்று அவனை கண்ணால் காண எண்ணி | அப்போது அப்பெருமானைக் கண்ணாரக் கண்டநுபவிக்க விரும்பி | மாறன் அருள் | ஆழ்வாருடைய க்ருபையை |
| | | உன்னுமவர்க்கு உள்ளம் உருகும். | அநுஸந்திப்பவர்களுக்கு நெஞ்சு குழையும். |

* * * இத்திருவாய்மொழியாகிய * மையார் கருங்கண்ணியில் உண்டான அநுபவம் மானஸாநுபவமாகையாலே அவனை பாஹ்ய கரணங்களாலே அநுபவிக்க விரும்பி அப்போதே அந்த விருப்பம் நிறைவேறப் பெறாமையாலே ஒரு பிராட்டி தசையை யெய்தி ஸ்மாரக பதார்த்தங்களாலே [பக்ஷிஸமூஹங்களாலும் மேகஸமூஹங்களாலும்] ஆழ்வார் தளர்ந்த படியைக் கூறுவதாம் * இன்னுயிர்ச் சேவலும் பதிகம். (௫௫)

உருகுமாலென்னெஞ்ச முன்செயல்களெண்ணி *
பெருகுமால் வேட்கையெனப்பேசி—* மருவுகின்ற
இன்னாப்புடனவன்சீ ரேய்ந்துரைத்தமாறன் சொல் *
என்றுச்சொல்லாதிருப்ப தெங்கு. (௫௬)

| | | | |
|---|---|---|---|
| இடர் அறுக்கும் என்று | நமது துயரங்களைப் போக்கவல்லவனென்று கொண்டு | மையலினால் | அறிவுகலக்கத்தினால் செய்ய வேண்டியது இன்னதென்றறியாமல் |
| அவன் பால் ஆங்கு விட்ட தூதர் | அப்பெருமானைக் குறித்து அனுப்பப்பட்ட தூதர் | மாறன் | ஆழ்வார் |
| மீண்டு வர பற்று மனத்தால் | மீண்டு வருமளவும் ஆறியிருக்கமாட்டாத திருவுள்ளத்தாலே | செய்ய திரு நாவாயில் | விலக்ஷணமான திருநாவாய்ப் பதியை நோக்கி |
| அற பதறி | மிகவும் விரைந்து | செல்ல நினைந்தான் | எழுந்தருள முயன்றார். |

* * * இத்திருவாய்மொழியாகிய * எங்கானலில் விடப்பட்ட தூதர் அத்தலைப்பட்டு எம்பெருமானுக்கு இவ்வவஸ்தையை யறிவித்து மீண்டு வருவதற்கு முன்னே ஆழ்வார் மிகவும் பதறித் திருநாவாயிலே செல்ல நினைந்த படியைக் கூறுவதாம் * அறுக்கும் வினையாயின பதிகம். ஈற்றடியில் 'செய்வதறியாமல்' என்கிற பாடம் மறுக்கத் தக்கது; தளைதட்டுதலால். செய்வு என்றாலும் செய்வதென்றே பொருள்படும்; "வியாக்கியைகள் செய்வால்" என்ற உபதேச ரத்தினமாலைப் பிரயோகமும் காண்க. (அஅ)

மல்லடிமை செய்யும் நாள் மால்தன்னைக்கேட்க * அவன்
சொல்லுமளவும் பற்றுத்தொன்னலத்தால் —* செல்கின்ற
ஆற்றாமைபேசி அலமந்த மாறனருள் *
மாற்றாகப் போகுமென்றனமால். (அகூ)

| | | | |
|---|---|---|---|
| மல் அடிமை செய்யும் நாள் | பரிபூரணமான கைங்கரியம் செய்யப் பெறுங் காலம் எப்போதோவென்று | தொல் நலத்தால் | இயற்கையான பக்தியினால் |
| மால் தன்னை கேட்க | எம்பெருமானை நோக்கிக் கேட்க | செல்கின்ற ஆற்றாமை பேசி அலமந்த மாறன் | தமக்கு நிகழ்கின்ற ஆற்றாமையை எடுத்துக் கூறி அலமாப்பையடைந்த ஆழ்வாருடைய |
| அவன் சொல்லும் அளவும் பற்று | அப்பெருமான் அறுதியிட்டுச் சொல்லுமளவும் ஆறியிருக்கமாட்டாத | அருள் மாற்று ஆக | கருணையே மருந்தாக |
| | | என் தன் மால் போகும் | எனது அஜ்ஞானம் தொலையும். |

* * * இத்திருவாய்மொழியாகிய * அறுக்கும் வினையில் * அடியேனுக்குப் பெறுநாள் எவைகொலோ * ஓர் நாளறியேனே * நாளேலறியேன் * கண்ணாரக்களிக்கின்றது இங்கென்று கொல்கண்டே * என்றிப்படி பலகால் பேசின ஆழ்வார் நித்ய கைங்கரியம் செய்யப்பெறும் நாள் என்றைக்கென்று எம்பெருமானைக் கேட்க, அவன் அறுதியிட்டுச் சொல்லுமளவும் பொறுத்திருக்கமாட்டாமையினாலே தமக்கு நிகழ்கின்ற ஆற்றாமையைப் பேசின பதிகம் * மல்லிகை கமழ் என்பதாம். (அகூ)

மாலுமதுவாஞ்சை முற்றும் மன்னுமுடம்பின்முடிவில் *
சாலநண்ணிச் செய்வனெனத் தானுகந்து —* மேலவனைச்
சீரார் கணபுரத்தே சேருமெனும் சீர்மாறன் *
தாராளே நந்தமக்குத் தாள். (கூ0)

| | | | |
|---|---|---|---|
| மால் | எம்பெருமான் | சால நண்ணி செய்வன் என | மிகவும் பொருத்தமாகத் தலைக்கட்டித் தருகிறேன்' என்றருளிச் செய்ய, |
| உமது வாஞ்சை முற்றும் | '(ஆழ்வீர்) உம்முடைய அபேக்ஷிதங்களெல்லாவற்றையும் | | |
| மன்னும் உடம்பின் முடிவில் | இந்த சரீரத்தின் முடிவிலே | தான் உகந்து மேல் அவனை | தாம் மனமகிழ்ந்து 'அப் பரம புருஷனை |

| | | | |
|---|---|---|---|
| சீர் ஆர் கணபுரத்தே சேரும் எனும் | திருக்கண்ணபுரத்திற் சென்று ஆச்ரயியுங்கோள்' என்றருளிச் செய்த | நமக்கு | நமக்கு |
| | | தாள் தாராரோ | தமது திருவடிகளை ப்ரஸாதித்தருளமாட்டாரோ ? |
| சீர்மாறன் | நம்மாழ்வார் | | |

* * * 'நாளேல் அறியேன்' என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! உமக்கு இந்த தேஹாவஸானத்திலே உம்மைப் பரமபதத்திலே கொண்டு போய் அடிமை கொள்ளக் கடவோம்' என்று காட்டிக்கொடுக்க, அத்தாலே திருவுள்ளமுவந்து அப்பெருமானைத் திருக்கண்ணபுரத்திலே சென்று சேருங்கோளென்று பரோபதேசம் பண்ணின பதிகம் * மாலை நண்ணி யென்பதாம். * மரணமானால் வைகுந்தங் கொடுக்கும்பிரான் * என்றதில் நோக்கு (கூ௰)

தாளடைந்தோர் தங்கட்குத் தானே வழித்துணையாம் *
காளமேகத்தைக் கதியாக்கி—* மீளுதலாம்
ஏதமிலாவிண்ணுலகிலேக வெண்ணும் மாறனென *
கேதமுள்ளதெல்லாம் கெடும். (கூக)

| | | | |
|---|---|---|---|
| தாள் அடைந்தோர் தங்கட்கு | தன் திருவடிகளைப் பற்றினவர்களுக்கு | விண் உலகில் ஏக எண்ணும் | பரமபதத்தில் எழுந்தருள எண்ணின |
| தானே வழித்துணை ஆம் காளமேகத்தை | தானே மார்க்கபந்துவா யின்ற காளமேகப் பெருமானை | மாறன் என | ஆழ்வார் என்று சொன்ன மாத்திரத்திலே |
| கதி ஆக்கி | வழிக்கு ஸஹாயமாகக் கொண்டு | கேதம் உள்ளது எல்லாம் கெடும் | துக்கமென்று பேர்பெற்றவை யெல்லாம் ஒழிந்துபோம். |
| மீளுதல் ஆம் ஏதம் இலா | மீட்சியாகிற குற்றமில்லாத | | |

* * * "மார்க்கபந்து சைத்யம் மோஹநந்த்ர மடுவிடும்" என்பது ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தி. இதுவே * மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான் * என்றபடியே 'தேஹாவஸானத்திலே பேறு' என்று எம்பெருமான் காட்டிக் கொடுக்கையாலே போக வொருப்பட்டார் ஆழ்வார்; அவர்க்குத் திருமோகூர்க் காள மேகப்பெருமான் வழித்துணையாக அமைந்தார்; இவ்விஷயம் * தாளதாமரைத் திருவாய்மொழியிலே அருளிச் செய்யப்பட்டது. (கூக)

கெடுமிடர் வைகுந்தத்தைக் கிட்டினாற்போல *
தடமுடையனந்தபுரந்தன்னில்—* படவரவில்
கண்டுயில் மாற்காட்செய்யக் காதலித்தான் மாறன் * உயர்
விண்டனிலுள்ளோர் வியப்பவே. (கூஉ)

| | | | |
|---|---|---|---|
| மாறன் | நம்மாழ்வார் | தடம் உடை அனந்தபுரம் தன்னில் | தடாகங்களையுடைய திருவனந்தபுரத்திலே |
| உயர் விண் தனில் உள்ளோர் வியப்ப | உயர்ந்த பரமபதத்திலுள்ள நித்தியஸூரிகள் ஆச்சரியப்படும்படி | படம் அரவில் கண் துயில் மாற்கு | படமுடைய சேஷன் மீது பள்ளி கொண்டருளும் திருமாலுக்கு |
| கெடும் இடர் வைகுந்தத்தை கிட்டினாற் போல | துக்கமற்றதான ஸ்ரீவைகுண்டத்தை யடைந்து அடிமை செய்யப்பெற்றாற் போல | ஆள் செய்ய காதலித்தான் | அடிமை செய்ய விரும்பினார். |

* * * பரமபதத்தில் போனால் அங்குச் செய்யக்கூடிய கைங்கரியங்களைத் திருவனந்தபுரத்திலே சேஷசாயியான ஸ்ரீபத்மநாபப் பெருமான் திருவடிகளிலே தாமும் தமருமாகச் சென்று செய்ய விரும்பினபடியைக் * கெடுமிடராய வெல்லாமென்கிற திருவாய்மொழியிலருளிச் செய்தாரென்க. (கூ௨)

வேய்மருதோளிந்திரைகோன் மேவுகின்றதேசத்தை *
தான்மருவாத்தன்மையினால் * தன்னையின்னம்—பூமியிலே
வைக்குமெனச் சங்கித்து மால்தெளிவிக்கத்தெளிந்த *
தக்கபுகழ்மாற னெங்கள்சார்வு. (கூங.)

| | | | |
|---|---|---|---|
| வேய் மரு தோள் இந்திரை கோன் | மூங்கில் போன்ற தோள்களையுடையவளான பிராட்டிக்கு வல்லபனான எம்பெருமான் | தன்னை இன்னம் பூமியிலே வைக்கும் என சங்கித்து | தம்மை இன்னமும் இந்த ஸம்ஸாரத்திலேயே இட்டுவைக்குமோவென்று அதிசங்கித்து |
| மேவுகின்ற தேசத்தை | எழுந்தருளியிருக்கும் இடத்தை | மால் தெளிவிக்க தெளிந்த | எம்பெருமான் தேற்றத் தேறின |
| தான் மருவா தன்மையினால் | தாம் புகப்பெறாமையினாலே | தக்க புகழ் மாறன் | தகுதியான புகழையுடைய ஆழ்வார் |
| | | எங்கள் சார்வு | எமக்குப் புகல். |

* * * தாம் மநோரதித்தபடியே அப்போதே அத்தேசத்திலே போய் அடிமை செய்யப் பெறாமையாலே கலங்கி 'பழையபடியே நமக்கு ஸம்ஸாரத்தில் இருப்பே சேஷித்துவிடுகிறதோ' என்று, ப்ரக்ருதி ஸம்பந்தத்தின் கொடுமையாலும் ஈச்வரஸ்வாதந்திரியத்தைப் பற்றவும் தமக்குண்டான அதிசங்கையை * வேய்மரு தோளிணைப் பதிகத்திலருளிச் செய்தாரென்க. மேலே சொன்ன அதிசங்கை முகபேதத்தாலே அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. அதாவது—ஒரு படுக்கையிலேகூட இருக்கச் செய்தே பசுமேய்க்கப் போகிற விடியற்காலம் வந்து, அக்காலத்துக்கேற்ற குயில் மயில் முதலானவற்றினுடைய பாடலாடல் முதலான அடையாளங்களையும் காண்கையாலே அவற்றையே கொண்டு 'கண்ணபிரான் பசுமேய்க்கப் போனான்' என்று அதிசங்கை பண்ணி நோவுபடுகிற இடைப் பெண்கள் பேச்சாலே அருளிச்செய்கிறதான * வேய்மரு தோளிணைப் பதிகத்திற்கு ஆழ்வார்தமக்குண்டான அதிசங்கையே உள்ளுறை பொருளாம்.

இதில் பத்தாவது பாட்டில் * செங்கனிவாயெங்களாயர் தேவே * என்றதின் சுவட்டின்று பூருவர்கள் நிர்வஹித்தபடியைத் தழுவி "மால் தெளிவிக்கத் தெளிந்த" என்றருளிச் செய்யப்பட்டது. (கூங.)

சார்வாகவேயடியில் தானுரைத்த பத்திதான் *
சீரார் பலத்துடனே சேர்ந்ததனை—* சோராமல்
கண்டுரைத்தமாறன் கழலிணையே நாடோறும் *
கண்டுகக்குமென்னுடையகண். (கூச)

| | | | |
|---|---|---|---|
| அடியில் | ஆரம்பத்தில் * வீடுமின் முற்றத்திலே | சீர் ஆர் பலத்துடனே சேர்ந்ததனை கண்டு | சிறந்த பலத்தோடே சேர்ந்த படியை பார்த்து |
| சார்வு ஆகவே | எல்லார்க்கும் உபாதேயமாகவே | சோராமல் உரைத்த | ஒன்றும் குறையாமல் அருளிச் செய்த |
| தான் உரைத்த பத்தி தான் | தாமருளிச் செய்த பக்தியானது | மாறன் | ஆழ்வாருடைய |

| | | | |
|---|---|---|---|
| கழல் இணையே நாள்தோறும் | உபய பாதங்களையே எப்போதும் | என்னுடைய கண் கண்டு உகக்கும் | எனது கண்கள் வெளித்துக்களிக்கும். |

* * * திருவாய்மொழி யென்பது ஒரு சிறந்த சாஸ்த்ரம். உபக்ரமித்த அர்த்தத்தை உபஸம்ஹாரம் பண்ணுவதென்பது சாஸ்த்ரார்த்தமாகையாலே முதலில் உபக்ரமித்த பக்தியோகத்தை * சார்வே தவநெறிக் கென்கிற திருவாய்மொழியிலே உபஸம்ஹரித்தருளினரென்கிறது. "பிணக்கறவைச் சார்வாக நிகமித்து" என்ற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியும் காண்க. (௧௪)

கண்ணனடியிணையில் காதலுறுவார்செயலை *
திண்ணமுறவே சுருங்கச்செப்பியே—* மண்ணவர்க்குத்
தானுபதேசிக்கை தலைக்கட்டினன்மாறன் *
ஆனபுகழ்சேர் தன்னருள். (௧௫)

| | | | |
|---|---|---|---|
| கண்ணன் அடி இணையில் | எம்பெருமானது பதவிணையில் | சுருங்க செப்பி | சுருக்கமாக அருளிச் செய்து |
| காதல் உறுவார் செயலை | பக்தியுடையவர்களின் செய்கையை | மண்ணவர்க்கு | இவ்வுலகத்தவர்களுக்கு |
| திண்ணம் உற | திடமாக | | |
| மாறன் | ஆழ்வார் | தான் உபதேசிக்கை தலைக்கட்டினன் | தாம் உபதேசிக்குந் தொழிலை முடித்துக் கொண்டார். |
| ஆன புகழ் சேர் தன் அருள் | சிறந்த கீர்த்தியோடே சேர்ந்த தமது க்ருபையினாலே | | |

* * * எம்பெருமான் தம்மைப் பரம பதத்திலே கொண்டு போகப் பதறுகிறபடியைக் கண்டு, சரம தசையிலே புறைந்துங் கிடக்கும் மஹாகிதிகளைப் புத்திரன் முதலானோர்க்குக் காட்டுமாபோலே ஆழ்வாரும் ஒருவருமிழவாதபடி எல்லார்க்கும் ஹிதங்களைச் சுருக்கமாக உபதேசிக்கவேண்டி * கண்ணன் கழலிணைப் பதிகத்திலே * நாள்வாய்மலரிட்டு நாள்வாய் நாமமே * * பரமனவன் நாமம் * கண்ணன்மலரிட்டு நினைமின் நெடியானே * என்றிப்படி மநோவாக் காயங்களாகிற கரணத்ரயத்தாலும் ஆகும் வ்ருத்தியை யுபதேசித்துத் தலைக்கட்டினராயிற்று.

"செயலைச் சுருங்கச் செப்பி" என்றது 'செய்யவேண்டிய காரியத்தை ஸங்க்ஷேபமாக அருளிச்செய்து' என்றபடி. (௧௫)

அருளாலடியிலெடுத்த மாலன்பால் *
இருளார்ந்த தம்முடம்பையிச்சித்து—* இருவிசும்பில்
இத்துடன்கொண்டேக இசைவுபார்த்தேயிருந்த *
சுத்திசொல்லும் மாறன்செஞ்சொல். (௧௬)

| | | | |
|---|---|---|---|
| அருளால் | க்ருபையினாலே | இத்துடன் கொண்டு ஏக | (தம்மை) இந்த சரீரத்தோடே கொண்டு போக |
| அடியில் எடுத்த மால் | (ஸம்ஸாரத்தில் நின்றும்) அடியிலே யெடுத்தருளின எம்பெருமான் | இசைவு பார்த்தே இருந்த | (தமது) அநுமதியை எதிர்பார்த்திருந்த |
| அன்பால் | ப்ரேம விசேஷத்தாலே | சுத்தி | அவனது சுத்தியை |
| இருள் ஆர்ந்த தம் உடம்பை இச்சித்து | ஹேயமான தமது திருமேனியை ஆசைப்பட்டு | மாறன் செஞ்சொல் | ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியானது |
| இருவிசும்பில் | பரமபதத்தில் | சொல்லும் | தெரிவிக்கும். |

* * * திருவாய்மொழி தொடங்கும் போதே * பயர்வற மதிநலமருளினன் * என்னும்படியாக அடியிலே தம்மை விஷயீகரித்தருளின ஸர்வேச்வரன் நம்மைப் பரமபதத்தேறக்கொண்டு போகத் திருவுள்ளம்பற்றி, இந்த சரமதிருமேனியோடே கொண்டுபோகப் பாரிக்க அதற்குத் தம்முடைய இசைவை யெதிர்பார்த்திருந்தமையை ஆழ்வார் * அருள்பெறுவாரடியார் பதிகத்திலே அருளிச் செய்தாரென்க. இப்பதிகத்திலே * இசைவின்றி யென்னெஞ்சத் தெப்பொழுதும் பிரியானே * என்ற பாசுரத்தில் ஸாக்ஷாத்தாகவும், மேல்பதிகத்தில் * மங்கவொட்டுன் மாமாயை * என்றதை நோக்கியும் அருளிச் செய்தபடி.

இதில் மூன்றும்படியில் "இவரிசைவு பார்த்திருந்த" என்று சிலர் ஓதும் பாடம் மறக்கவும் மறக்கவும் தக்கது. அதில் 'இவர்' என்பது அந்வயிக்க வரியதன்று. இரண்டாமடியில் 'தம்முடம்பை யிச்சித்து' என்றதுபோல இங்கும் 'தம்மிசைவு' என்னப் பொருந்துமேயல்லது இவரிசைவு என்னப் பொருந்தாது. இவ்விஷயம் ஆழ்ந்த வ்யுத்பத்தியுடையார்க்கே அவகாஹிக்கும். (கூசு)

செஞ்சொற்பரன்றனது சீராரும்மேனிதனில் *
வஞ்சித்துச்செய்கின்ற வாஞ்சைதனின் *—விஞ்சுதலைக்
கண்டவனைக்காற்கட்டிக் கைவிடுவித்துக்கொண்ட *
திண்டிறல்மாறன் ஞந்திரு. (கூஎ)

| | | | |
|---|---|---|---|
| செஞ்சொல் பரன் | செஞ்சொற்களாலே பிரதிபாதிக்கப்படுகின்ற பரமபுருஷன் | கை விடுவித்துக் கொண்ட | (அவனது மாயவலையிலே தாம் அகப்படாதபடி) தம்மை விடுவித்துக் கொண்ட |
| சீர் தனது ஆரும் மேனி தனில் | தம்முடைய சிறந்த திருமேனியிலே | | |
| வஞ்சித்து செய்கின்ற வாஞ்சை தனின் விஞ்சுதலை கண்டு | வஞ்சனையாகச் செய்கிற விருப்ப மிகுதியைக் கண்டு | திண் திறல் மாறன் | திடமான சக்தியையுடையரான ஆழ்வார் |
| அவனை கால் கட்டி | அவன் திருவடிகளைக் கட்டிக் கொண்டு | நம் திரு | நமக்குச் செல்வம். |

* * * தம்மோடே வந்து கலந்து நமக்கு விதேயனாய்த் தம் திருமேனியிலே மிகுந்த அபிநிவேசமுடையனாய்த் திருமேனியோடே தம்மையும் திருநாட்டிலே கொண்டு போகவேணுமென்று எம்பெருமான் காட்டுகிற ருசாதிசயத்தைக் கண்ட ஆழ்வார் 'ஐயோ! இவ்வழுக்குடம்பின் தோஷ மிகுதியை யறியாமல் ஸாகாங்க்ஷனாயிருக்கிற இவனுக்கு இதின் தோஷத்தை யுணர்த்தினேனாகில் இத்தைத் தவிர்வன்' என்று நினைந்து இதின் தோஷங்களை அவனுக்கறிவிக்க, அபிமதவிஷயத்தில் அழுக்கு உகப்பாரைப்போல அது தானே அவனுக்கு மேல்விழுகைக்கு உடலாக 'பிரானே! இந்த நினைவை நீ தவிர்ந்துகொள்ளவே வேண்டும்' என்று அவனைக் காற்கட்டி அந்த வாஞ்சையை விடுவித்துக் கொண்டாராழ்வார் * செஞ்சொற்கவிகாளென்கிற திருவாய்மொழியிலே.

ஸர்வசக்தனான அவனுடைய பிடிவாதத்தையும் ஆழ்வார் ஸ்வசக்தியாலே மாற்றினாராதலால் 'திண் திறல் மாறன்' என்று மாமுனிகளிடம் விருது பெற்றாரென்க.

* மங்கவொட்டுன் மாமாயை * என்கிற பாசுரம் இத்திருவாய் மொழிக்கு உயிரானது. "வேர் சூடுமவர்கள் மண்பற்றுக் கழற்றாதாப்போலே ஜ்ஞாநியை விக்ரஹத்தோடே ஆதரிக்

ளும்" என்கிற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியும் "வேர் சூடுவார் மண்பற்றுப்போலே" என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தியும் இங்கே அநுஸந்தேயம். (கூஎ)

திருமால் தன்பால் விருப்பம் செய்கின்ற நேர்கண்டு *
அருமாயத்தன் றகல்விப்பானேன்—* பெருமால்நீ
இன்றென்பால்செய்வா னென்னேன்ன இடருற்று நின்றான் *
துன்னுபுகழ்மாறனைத்தான் சூழ்ந்து. (கூஅ)

| | | | |
|---|---|---|---|
| திருமால் | ஸர்வேச்வரன் | நீ பெருமால் செய்வான் என் | நீ மிக்க வ்யாமோஹத்தைச் செய்வானென்?' |
| தன் பால் | தம்மிடத்து | என்ன | என்று (ஆழ்வார்) கேட்க, |
| விருப்பம் செய்கின்ற நேர் கண்டு | அதிகமான ஆதரம் செய்யும்படியைக் கண்டு | தான் | (அப்போது) எம்பெருமான் தான் |
| அன்று அரு மாயத்து அகல்விப்பான் என் | '(எம்பெருமானே!) இதற்கு முன்பெல்லாம் (என்னை) ப்ரக்ருதியிலே யிட்டு வைத்து அகற்றி விடுவானேன்? | துன்னு புகழ் | மிக்க புகழையுடையரான |
| | | மாறனை சூழ்ந்து | அவ்வாழ்வாரை வளைந்து கொண்டு |
| இன்று என் பால் | இப்பொழுது என்னிடத்தில் | இடர் உற்று நின்றான். | (அவர் கேட்ட கேள்விக்கு விடை சொல்ல மாட்டாமல்) தடுமாறி நின்றான். |

* * * எம்பெருமான் ஆழ்வார் பக்கலிலே அளவுகடந்த அபிநிவேசத்தைக் காட்டத் தொடங்கினான்; அது கண்ட ஆழ்வார் 'பிரானே! இன்றளவும் என்னைப் படுகுழியிலே தள்ளி வைத்து இன்று இங்ஙனே ஆதரிப்பதற்கு என்ன ஹேது?' என்று மடிபிடித்துக்கேட்க, அதற்கு ஒரு மறுமாற்றமும் சொல்லப் போகாமையாலே எம்பெருமான் தடுமாறி நின்றான்; என்பது * திருமாலிருஞ் சோலைமலை யென்றே னென்னத் திருவாய்மொழியில் அருளிச் செய்யப்பட்டதாம். ஆசார்ய ஹ்ருதயத்தின் முடிவில் "இன்று அஹேதுகமாக ஆதரிக்கிற நீ அநாதிகாலம் உபேக்ஷித்ததற்கு ஹேது சொல்லென்று மடியைப் பிடிக்க" என்று தொடங்கி விரிவாக அருளிச்செய்துள்ள விஷயங்கள் இங்கே அநுஸந்தேயம். (கூஅ)

சூழ்ந்துநின்ற மால்விசும்பில் தொல்லைவழிகாட்ட *
ஆழ்ந்ததனை முற்றுமநுபவித்து—* வாழ்ந்தங்
கடியருடனே யிருந்தவாற்றை யுரைசெய்தான் *
முடிமகிழ்சேர் ஞானமுனி. (கூகூ)

| | | | |
|---|---|---|---|
| முடி மகிழ் சேர் ஞானம் முனி | திரு முடியிலே வகுள மாலையணிந்த ஞான முனிவராகிய ஆழ்வார் | அதனை முற்றும் ஆழ்ந்து அநுபவித்து | அங்குள்ள அநுபவங்களையெல்லாம் ஆழ்ந்து அநுபவித்து |
| சூழ்ந்து நின்ற மால் | தம்மைச் சூழ்ந்து நின்ற எம்பெருமான் | அங்கு வாழ்ந்து | அவ்விடத்தே வாஸம் பண்ணி |
| விசும்பில் | பரமபதத்தில் | | |
| தொல்லை வழி காட்ட | அநாதி மார்க்கமான அர்ச்சிராதி மார்க்கத்தைக் காட்டிக் கொடுக்க | அடியருடனே இருந்த ஆற்றை உரை செய்தான் | நித்யமுக்தர்களுடனே கூடியிருந்தபடியை அருளிச் செய்தார். |

*** எம்பெருமான் ஆழ்வாரைத் திருநாட்டிலே கொண்டு போய் வைத்து இவரும் தானுமாக அநுபவிப்பதாய் மநோரதிக்க இவர்க்கு அர்ச்சிராதி மார்க்கத்தையும் அங்குள்ளார் பண்ணும் ஸத்கார விசேஷங்களையும் பரமபதப்ராப்தியையும் அங்கு நடைபெறும் விசேஷங்களையும் தன்னுடைய ஸ்வரூபரூப குணவிபூதிகளையும் விசதமாக இவர் கண்டநுபவிக்கலாம்படி பரஜ்ஞாந தசையைப் பிறப்பித்துக் காட்டிக்கொடுக்க, இவரும் அவற்றை அநுஸந்தித்தாகத் திருப்புளியாழ்வாரடியிலிருந்து கொண்டே கண்டநுபவித்து * அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்து தாம் பெற்ற அப்பேற்றை * சூழ்விசும்பு பதிகத்திலருளிச் செய்தாரென்றதாயிற்று. (௯௯)

முனிமாறன் முன்புரைசெய் முற்றின்பம் நீங்கி *
தனியாகிநின்று தளர்ந்து * நனியாம்
பரமபத்தியால் நைந்து பங்கயத்தாள் கோனை *
ஒருமையுற்றுச் சேர்ந்தா னுயர்ந்து. (௧௦௦)

| | | | |
|---|---|---|---|
| முனி மாறன் | சடகோப மாமுனிவர் | பங்கயத்தாள் கோனை | திருமாலை |
| முன்பு உரை செய் | கீழே அருளிச் செய்த | ஒருமை உற்று உயர்ந்து சேர்ந்தான் | திருவுள்ளத்தாலே ஒருமைப்பட்டு அதனாலே நித்யஸூரிகளின் உயர்வை யுடையராகி எம்பெருமானோடே சேர்ந்தாராயிற்று. |
| முற்றின்பம் நீங்கி | இன்பம் முழுதும் நீங்கினவராகி | | |
| தனி ஆகி நின்று தளர்ந்து | தனிமையாய் நின்று வருந்தி | | |
| நனி ஆம் பரமபத்தியால் நைந்து | அதிகமாக விளைந்த பரம பக்தியினால் பரிபக்வராய் | | |

*** சூழ்விசும்பணி முகிலென்கிற கீழ்த்திருவாய்மொழியிலே பரம பதத்திலேபுக்குப் பரிபூர்ணாநந்த சாலியாய் நித்யஸூரிகள் திரளிலே இருக்கிறபடியாகத் தம்மை யநுஸந்தித்தது விதாஜ்ஞாநாநுஸந்தானமாத்திரமாய் உள்ளபடியே யன்றிக்கே யொழிகையாலே, மேருமலையுச்சியிலே இன்பம் தலைச்சிறப்ப விருந்தவன் பேராழமான பாதாளத்திலே தலைகீழாகத் தள்ளுண்டு விழுந்து நோவுபடுமா போலே இப்பிறவிப் பெருங்குழியிலேயே தனியே தாமிருக்கிறபடியைக் கண்டு ஆற்றாமை தலையெடுத்துப் பெருமிடறு செய்து கூப்பிட்டுப் பெரிய ஆர்த்தியோடே திருவடிகளிலே சரணம்புக, பெரிய திருவடி திருத்தோளிலே பெரிய பிராட்டியாரோடேகூட இவர பேக்ஷித்தபடியே எம்பெருமான் வந்து தோற்றி, காற்கட்டான ப்ரக்ருதிஸம்பந்தத்தையு மறுத்துத் திருநாட்டிலே கொண்டுபோய் நித்யஸூரிகளோடே ஒரு கோவையாக்கி நித்ய கைங்கரியம் கொண்டருள, இங்ஙனம் தாம் * அவாவற்று வீடுபெற்ற படியை * முனியே நான்முகனே யென்கிற திருவாய்மொழியில் அருளிச் செய்து தலைக்கட்டினாராழ்வார் — என்றதாயிற்று. (௧௦௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.


பெருமாள்கோயில் ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்
இயற்றிய
திருவாய்மொழி நூற்றந்தாதி உரை
முற்றுப் பெற்றது.

# நாலாயிரத்தனியன்கள்.

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம் /
யதீந்த்ர ப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் //

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் (உ)

யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாய மேநே!
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே (ங)

மாதா பிதா யுவதய ஸ்தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா. (ச)

பூதம் ஸரச்ச மஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலசேகரயோகிவாஹாந்
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிஸ்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்! (ரு)

குருமுகமநதீத்ய ப்ராஹவேதாநசேஷாந்
நரபதிபரிக்லப்தம் சுல்கமாதாதுகாம:
ச்வசுரமமரவந்த்யம் ரங்கநாதஸ்யஸாக்ஷாத்
த்விஜகுலதிலகம்தம் விஷ்ணுசித்தம் நமாமி!! (சு)

மின்னார் தடமதிள் சூழ் வில்லிபுத்தூரென்று, ஒருகால்
சொன்னார்கழற்கமலஞ்சூடினோம்—* முன்னாள்
கிழியறுத்தானென்றுரைத்தோம் * கீழ்மையினிற்சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து. (எ)

பாண்டியன்கொண்டாடப் பட்டர்பிரான்வந்தானென்
றீண்டியசங்கம்எடுத்தூத—வேண்டிய
வேதங்களோதிவிரைந்து கிழியறுத்தான்
பாதங்கள்யாமுடைய பற்று. (அ)

அன்னவயல்புதுவையாண்டாள் அரங்கற்குப்
பன்னுதிருப்பாவைப்பல்பதியம்—இன்னிசையால்
பாடிக்கொடுத்தாள் நற்பாமாலை, பூமாலை
சூடிக்கொடுத்தாளைச்சொல்லு. (கo)

சூடிக்கொடுத்தசுடர்க்கொடியே * தொல்பாவை
பாடியருளவல்லபல்வளையாய் * —நாடிநீ
வேங்கடவற்கென்னைவிதியென்றவிம்மாற்றம் *
நாம்கடவாவண்ணமேநல்கு. (கக)

அல்லிநாள்தாமரைமேலாரணங்கினின் துணைவி
மல்லிநாடாண்டமடமயில்—மெல்லியலாள் *
ஆயர்குலவேந்தனாகத்தாள் * தென்புதுவை
வேயர்பயந்தவிளக்கு. (கஉ)

இன்னமுதமூட்டுகேனிங்கேவாபைங்கிளியே
தென்னரங்கம்பாடவல்லசீர்ப்பெருமாள் * பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள்சேரலர்கோன் எங்கள்
குலசேகரனென்றேகூறு. (கங)

ஆரங்கெடப்பரனன்பர்கொள்ளாரென்று, அவர்களுக்கே
வாரங்கொடுகுடப்பாம்பில்கையிட்டவன்—மாற்றலரை
வீரங்கெடுத்தசெங்கோல்கொல்லிகாவலன் வில்லவர்கோன்
சேரன்குலசேகரன்முடிவேந்தர்சிகாமணியே. (கச)

தருச்சந்தப்பொழில்தழுவுதாரணியின் துயர்தீரத்
திருச்சந்தவிருத்தம் செய்திருமழிசைப்பரன்வருமூர்
கருச்சந்தும்காரகிலும்கமழ்கோங்குமணநாறும்
திருச்சந்தத்துடன்மருவுதிருமழிசைவளம்பதியே. (கரு)

உலகுமழிசையுமுள்ளுணர்ந்து, தம்மில்
புலவர்புகழ்க்கோலால் தூக்க—உலகுதன்னை
வைத்தெடுத்தபக்கத்தும், மாநீர்மழிசையே
வைத்தெடுத்தபக்கம்வலிது. (கசு)

மற்றொன்றும்வேண்டாமனமேமதிளரங்கர்
கற்றினம்மேய்த்தகழலிணைக்கீழ்—உற்ற
திருமாலைபாடும்சீர்த்தொண்டரடிப்பொடியெம்
பெருமானை * எப்பொழுதும்பேசு. (கள)

மண்டங்குடியென்பர்மாமறையோர்மன்னியசீர்
தொண்டரடிப்பொடிதொன்னகரம் *—வண்டு
திணர்த்தவயல்தென்னரங்கத்தம்மானை * பள்ளி
உணர்த்தும்பிரானுதித்தவூர். (கஅ)

காட்டவேகண்டபாதகமலநல்லாடையுந்தி
தேட்டருமுதரபந்தம் திருமார்புகண்டம்செவ்வாய்
வாட்டமில்கண்கள்மேனி முனியேறித்தனிபுகுந்து
பாட்டினால்கண்டுவாழும் பாணர்தாள்பரவினோமே. (உக)

கலயாமி கலித்வம்ஸம் கவிம் லோகதிவாகரம் !
யஸ்ய கோபி: ப்ரகாசாபிராவித்யம் நிஹதம் தம: !! (உஉ)

வாழிபரகாலன்வாழிகலிகன்றி
வாழிகுறையலூர்வாழ்வேந்தன் * வாழியரோ
மாயோனைவாள்வலியால் மந்திரங்கொள்மங்கையர்கோன் *
தூயோன்சுடர்மானவேல். (௨௩)

நெஞ்சுக்கிருள்கடிதீப மடங்காநெடும்பிறவி
நஞ்சுக்குநல்லவமுதம் * தமிழ்நன்னூல்துறைகள்
அஞ்சுக்கிலக்கியமாரணசாரம் * பரசமயப்
பஞ்சுக்கனலின்பொறி பரகாலன்பனுவல்களே. (௨௪)

எங்கள்கதியேயிராமாநுசமுனியே
சங்கைகெடுத்தாண்டதவராசா—பொங்குபுகழ்
மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும்
தங்குமனம்நீயெனக்குத்தா. (௨௫)

கைதைசேர்பூம்பொழில்சூழ்கச்சிநகர்வந்துதித்த
பொய்கைப்பிரான்கவிஞர்போரேறு—வையத்
தடியவர்கள்வாழவருந்தமிழ்நூற்றந்தாதி
படிவிளங்கச்செய்தான்பரிந்து. (௨௬)

என்பிறவிதீரவிறைஞ்சினேனின்னமுதா
அன்பேதகளியளித்தானை—நன்புகழ்சேர்
சீதத்தார்முத்துக்கள்சேருங்கடல்மல்லைப்
பூதத்தார்பொன்னங்கழல். (௨௭)

சீராரும்மாடத்திருக்கோவலூரதனுள்
காரார்கருமுகிலைக்காணப்புக்கு—ஓராத்
திருக்கண்டேனென்றுரைத்தபிரான்கழலே
உரைக்கண்டாய்நெஞ்சேயுகந்து. (௨௮)

நாராயணன்படைத்தான்நான்முகனை நான்முகனுக்
கேரார்சிவன்பிறந்தானென்னுஞ்சொல்—சீரார்
மொழிசெப்பிவாழலாம்நெஞ்சமே மொய்பூ
மழிசைப்பரனடியேவாழ்த்து. (௨௯)

கருவிருத்தக்குழிநீத்தபின்காமக்கடுங்குழிவீழ்ந்து
ஒருவிருத்தம்புக்குழலுறுவீருயிரின்பொருள்கட்கு
ஒருவிருத்தம்புகுதாமல் குருகையர்கோனுரைத்த
திருவிருத்தத்தோரடிகற்றிரீர்திருநாட்டகத்தே. (௩௦)

காசினியோர்தாம்வாழக் கலியுகத்தேவந்துதித்து
ஆசிரியப்பாவதனாலருமறைநூல்விரித்தானை
தேசிகனைப்பராங்குசனைத்திகழ்வகுளத்தாரானை
மாசடையாமனத்துவைத்துமறவாமல்வாழ்த்துதுமே. (௩௧)

முந்துற்றநெஞ்சேமுயற்றிதரித்துரைத்து
வந்தித்தவாயாரவாழ்த்தி—சந்த

மூருகூரும்சோலைசூழ்மொய்பூம்பொருநல்
குருகூரன்மாறன்பேர்கூறு. (௩௨)

வாழிபரகாலன்வாழிகலிகன்றி
வாழிகுறையலூர்வாழ்வேந்தன்—வாழியரோ
மாயோனைவாள்வலியால்மந்திரங்கொள்மங்கையர்கோன்
தூயோன்சுடர்மானவேல். (௩௩)

மூள்ளிச்செழுமலரோதாரான்மூளைமதியம்
கொள்ளிக்கென்னுள்ளம்கொதியாமே—வள்ளல்
திருவாளன்சீர்க்கலியன்கார்க்கலியைவெட்டி
மருவாளன்தந்தான்மடல். (௩௪)

பொன்னுலகில்வானவரும்பூமகளும்போற்றிசெய்யும்
நன்னுதலீர்நம்பிநறையூரர்—மன்னுலகில்
என்னிலைமைகண்டுமிரங்காரேயாமாகில்
மன்னுமடலூர்வன்வந்து. (௩௫)

அவிதிதவிஷயாந்தர: சடாரே ருபநிஷதாமுபகாநமாத்ரபோக:।
அபிச குணவசாத்ததேகசேஷீ மதுரகவிர் ஹ்ருதயே மமாவிரஸ்து.॥ (௩௬)

வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ் செய்த
மாறன் சடகோபன் வண்குருகூர்—ஏறெங்கள்
வாழ்வாமென்றேத்தும் மதுரகவியாரெம்மை
ஆள்வார் அவரேயரண். (௩௭)

பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோபவாங்மயம்
ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம். (௩௮)

திருவழுதி நாடென்றும் தென்குருகூரென்றும்
மருவினியவண் பொருநலென்றும்—அருமறைக
ளந்தாதிசெய்தா னடியிணையே யெப்பொழுதும்
சிந்தியாய் நெஞ்சே தெளிந்து. (௩௯)

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர்பேணும்
இனத்தாரையல்லா திறைஞ்சேன்—தனத்தாலும்
ஏதுங் குறைவிலே னெந்தை சடகோபன்
பாதங்கள் யாமுடையபற்று. (௪௦)

ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமாநுசமுனிதன்
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்—ஆய்ந்தபெரும்
சீரார்சடகோபன் செந்தமிழ் வேதம் தரிக்கும்
பேராதவுள்ளம்பெற. (௪௧)

வான்திகழும்சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்றதமிழ் மறைகளாயிரமும்—ஈன்ற

முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த
இதத்தாயிராமாநுசன். (சஉ)

மிக்கவிறை நிலையும் மெய்யாமுயிர் நிலையும்
தக்கநெறியும் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையுமோதும் குருகையர்கோன்
யாழினிசை வேதத்தியல். (சங)

முன்னை வினையகல மூங்கிற் குடியமுதன்
பொன்னங்கழற் கமலப்போதிரண்டும்—என்னுடைய
சென்னிக்கணியாகச் சேர்த்தினேன், தென்புலத்தார்க்
கென்னுக் கடவுடையேன் யான். (சச)

நயந்தருபேரின்பமெல்லாம் பழுதென்று நண்ணினர்பால்
சயந்தருகீர்த்தியிராமாநுச முனிதாளிணைமேல்
உயர்ந்த குணத்துத்திருவரங்கத் தமுதோங்கும் அன்பால்
இயம்பும் கலித்துறையந்தாதி யோதவிசை நெஞ்சமே. (சரு)

சொல்லின் தொகை கொண்டுனதடிப்போதுக்குத் தொண்டுசெய்யும்
நல்லன்பரேத்து முன்நாமமெல்லா மென்றன்நாவினுள்ளே
அல்லும் பகலும் அமரும்படி நல்கு அறுசமயம்
வெல்லும்பரம இராமாநுச இதென் விண்ணப்பமே. (சசா)

நாலாயிரத்தனியன்கள் முற்றும்.

---

ஸ்ரீ:

# அப்பிள்ளை திருவாய் மலர்ந்தருளிய ஆழ்வாராசார்யர்கள் வாழித்திரு நாமங்கள்.

---

மண்ணுலகத்துள்ளோர்கள் மகிழ்ந்துவாழ
மணவாளமாமுனிகளருள் தன்னாலே
பண்ணருளிச்செயல்விளக்கம் வாழிநாமம்
பத்தியுடனிவ்வுலகிற் பயில்வார்கேட்பார்
விண்ணுலகத்தோர்களினுங் கீர்த்தியுற்று
விளங்கியிட மெய்ஞ்ஞான வாழ்வுபெற்றே
கண்ணனடியார்களுடன் கலந்து நாளுங்
காசினியிற் சதிராக வாழ்வார் தாமே.

வேதத்தின் நுண்பொருளைத் தமிழால்நாளும்
விளக்கியிடப்பன்னிருவர் வந்துதோன்றும்
மாதத்தையவரவர்களுதித்த நாளை
வாழ்பதியைக் கலைத்தொகையை மனத்தில் வைத்துப்
போதத்தைத் தருந்தமிழால் வாழிநாமம்
பூதலத்திற் பேசுகின்றோனிதனைக்கற்பார்
பாதத்தை யென் முடிமேலணியாப் பூண்டு
பன்னாளுங்கைகூப்பிப் பணிவேன்யானே.

போதமிகும் பொய்கையார் பூதத்தார் வாழியே *
புகழ்பேயார் மழிசையர்கோன் புத்தூரன் வாழியே *
நாதமுனிதொழுங்குருகை நாவீறன் வாழியே
நற்பாணன் கொல்லிநகர்நாதனார் வாழியே *
ஆதரிக்குந் தொண்டரடிப் பொடி தாள்கள் வாழியே *
அருட்கலியன் மதுரகவியாண்டாளும் வாழியே *
ஏதமற்ற நாலாயிரப்பனுவல் வாழியே *
இவருதித்த நாள்மாத மெழிற்பதியும் வாழியே *

(பொய்கையாழ்வார்)

செய்யதுலாவோணத்திற் செகத்துதித்தான் வாழியே *
திருக்கச்சி மாநகரஞ் செழிக்கவந்தோன் வாழியே *
வையந்தகளிநூறும் வகுத்துரைத்தான் வாழியே *
வனசமலர்க் கருவதனில் வந்தமைந்தான் வாழியே *
வெய்யகதிரோன் தன்னை விளக்கிட்டான் வாழியே *
வேங்கடவர் திருமலையை விரும்புமவன் வாழியே *
பொய்கை முனிவடிவழகும் பொற்பதமும் வாழியே *
பொன்முடியுந் திருமுகமும் பூதலத்தில் வாழியே.

## (பூதத்தாழ்வார்)

அன்பேதகளி நூறு மருளினான் வாழியே *
ஐப்பசியிலவிட்டத்தி லவதரித்தான் வாழியே *
நன்புகழ் சேர்குருக்கத்தி நாண்மலரோன் வாழியே *
நல்லதிருக்கடன் மல்லை நாதனார் வாழியே *
இன்புருகு சிந்தைதிரி யிட்டபிரான் வாழியே *
எழின்ஞானச் சுடர் விளக்கை யேற்றினான் வாழியே *
பொன்புரையுந் திருவரங்கர் புகழுரைப்போன் வாழியே *
பூதத்தார்தாளிணையிப் பூதலத்தில் வாழியே. * (௨)

## (பேயாழ்வார்)

திருக்கண்டேனென நூறுஞ் செப்பினான் வாழியே *
சிறந்த ஐப்பசி சதயம் செனித்தவள்ளல் வாழியே *
மருக்கமழும் மயிலை நகர் வாழவந்தோன் வாழியே *
மலர் கரிய நெய்தல் தனில் வந்துதித்தான் வாழியே *
நெருங்கிடவே யிடை கழியில் நின்றசெல்வன் வாழியே *
நேமிசங்கன் வடிவழகை நெஞ்சில் வைப்போன் வாழியே *
பெருக்கமுடன் திருமழிசைப் பிரான்தொழுவோன் வாழியே *
பேயாழ்வார் தாளிணையிப் பெருநிலத்தில் வாழியே. (௩)

## (திருமழிசைப்பிரான்)

அன்புடனந்தாதி தொண்ணூற்றாறுரைத்தான் வாழியே *
அழகாருந் திருமழிசை யமர்ந்தசெல்வன் வாழியே *
இன்பமிகு தையில்மகத்திங்குதித்தான் வாழியே *
எழிற்சந்த விருத்தம் நூற்றிருபதீந்தான் வாழியே *
முன்புகத்தில் வந்துதித்த முனிவனார் வாழியே *
முழுப்பெருக்கில் பொன்னியெதிர் மிதந்த சொல்லோன் வாழியே
நன்புவியில் நாலாயிரத்தெழு நூற்றான் வாழியே *
நங்கள் பத்திசாரனிரு நற்பதங்கள் வாழியே. (௪)

## (நம்மாழ்வார்)

ஆன திருவிருத்தம் நூறுமருளினான் வாழியே *
ஆசிரியமேழுபாட்டளித்த பிரான் வாழியே *
ஈனமறவந்தாதி யெண்பத்தேழீந்தான் வாழியே *
இலகு திருவாய் மொழியாயிரமுரைத்தான் வாழியே *
வானணியும்மா மாடக் குருகை மன்னன் வாழியே *
வைகாசி விசாகத்தில் வந்துதித்தான் வாழியே *
சேனையர்கோனவதாரஞ் செய்தவள்ளல் வாழியே *
திருக்குருகைச் சடகோபன் திருவடிகள் வாழியே. * (௫)

(குலசேகரப்பெருமாள்)

அஞ்சனமாமலைப் பிறவியாதரித்தோன் வாழியே *
அணியரங்கர் மணத்தூணை யடைந்துய்ந்தோன் வாழியே *
வஞ்சி நகரந்தன்னில் வாழவந்தோன் வாழியே *
மாசிதனிற் புனர்பூசம் வந்துதித்தான் வாழியே *
அஞ்சலெனக்குடப்பாம்பிலங்கையிட்டான் வாழியே *
அநவரதமிராமகதை அருளுமவன் வாழியே *
செஞ்சொல்மொழி நூற்றஞ்சுஞ் செப்பினான் வாழியே *
சேரலர் கோன் செங்கமலத் திருவடிகள் வாழியே *

(பட்டர் பிரான்)

நல்லதிருப்பல்லாண்டு நான்மூன்றோன் வாழியே *
நானூற்றிருபத்தொன்றும் நமக்குரைத்தான் வாழியே *
சொல்லரியவானிதனிற்சோதிவந்தான் வாழியே *
தொடைசூடிக்கொடுத்தாள் தான் தொழுந்தமப்பன்வாழியே *
செல்வநம்பிதன்னைப்போற்சிறப்புற்றான் வாழியே *
சென்றுகிழியறுத்துமால்தெய்வமென்றான் வாழியே *
வில்லிபுத்தூர்நகரத்தைவிளக்கினான் வாழியே
வேதியர்கோன்பட்டர்பிரான்மேதினியில் வாழியே. (எ)

(தொண்டரடிப்பொடியாழ்வார்)

மண்டங்குடியதனைவாழ்வித்தான் வாழியே *
மார்கழியிற்கேட்டைதனில்வந்துதித்தான் வாழியே *
தெண்டிரைசூழரங்கரையே தெய்வமென்றான் வாழியே
திருமாலையொன்பதஞ்சுஞ்செப்பினான் வாழியே *
பண்டுதிருப்பள்ளியெழுச்சிப்பத்துரைத்தான் வாழியே *
பாவையர்கள் கலவிதனைப்பழித்தசெல்வன் வாழியே *
தொண்டுசெய்துதுளபத்தால்துலங்கினான் வாழியே *
தொண்டரடிப்பொடியாழ்வார்துணைப்பதங்கள் வாழியே. (அ)

(திருப்பாணாழ்வார்)

உம்பர்தொழும்மெய்ஞ்ஞானமுறையூரான் வாழியே *
உரோகிணிநாள்கார்த்திகையிலுதித்தவள்ளல் வாழியே *
வம்பவிழ்தார்முனிதோளில்வகுத்தபிரான் வாழியே *
மலர்க்கண்ணில்வேறொன்றும்வையாதான் வாழியே *
அம்புவியில்மதிளரங்கரகம்புகுந்தான் வாழியே *
அமலனாதிபிரான்பத்துமருளினான் வாழியே *
செம்பதுமையருள்கூரும்செல்வனார் வாழியே *
திருப்பாணன்பொற்பதங்கள்செகதலத்தில் வாழியே. (கூ)

(கலியன்)

கலந்ததிருக்கார்த்திகைக்கார்த்திகைவந்தோன் வாழியே *
காசினியோன்குறையலூர்க்காவலோன் வாழியே *
நலந்திகழாயிரத்தெண்பத்துநாலுரைத்தான் வாழியே *
நாலைந்துமாறைந்தும்நமக்குரைத்தான் வாழியே *
இலங்கெழுகூற்றிருக்கையிருமடலீந்தான் வாழியே *
இம்மூன்றிலிருநூற்றுமூவொன்பான் வாழியே *
வலந்திகழுங்குமுதவல்லிமணவாளன் வாழியே *
வாட்கலியன்பரகாலன்மங்கையர்கோன் வாழியே. (௰)

## பெரியநம்பிகள்

அம்புவியில்பதின்மர்கலையாய்ந்துரைப்போன் வாழியே *
ஆளவந்தார்தாளிணையையடைந்துய்ந்தோன் வாழியே *
உம்பர்தொழுமரங்கேசர்க்குகப்புடையோன் வாழியே *
ஓங்குதனுக்கேட்டைதனிலுதித்தபிரான் வாழியே *
வம்பவிழ்தார்வரதருரைவாழிசெய்தான் வாழியே *
மாறனேர்நம்பிக்குவாழ்வளித்தான் வாழியே *
எம்பெருமானார்முனிவர்க்கிதமுரைத்தான் வாழியே *
எழில்பெரியநம்பிசரணினிதூழி வாழியே. (௯)

## (திருக்கச்சிநம்பிகள்)

மருவாருந் திருமல்லி வாழவந்தோன் வாழியே *
மாசிமிருக சீரிடத்தில் வந்துதித்தான் வாழியே *
அருளாளருடன் மொழி சொல்லதிசயந்தோன் வாழியே *
ஆறுமொழி பூதூரர்க் களித்த பிரான் வாழியே *
திருவால வட்டஞ்செய்து சேவிப்போன் வாழியே *
தேவராசாட்டகத்தைச் செப்புமவன் வாழியே *
தெருளாருமாளவந்தார் திருவடியோன் வாழியே *
திருக்கச்சி நம்பி யிருதிருவடிகள் வாழியே. (௧௦)

## எம்பெருமானார்.

அத்தி கிரியருளாளரடி பணிந்தோன் வாழியே *
அருட்கச்சி நம்பியுரையாறு பெற்றோன் வாழியே *
பத்தியுடன் பாடியத்தைப் பகர்ந்திட்டான் வாழியே *
பதின்மர்கலையுட் பொருளைப் பரிந்துகற்றான் வாழியே *
சுத்தமகிழ் மாறனடி தொழுதுய்ந்தோன் வாழியே *
தொல்பெரிய நம்பிசரண் தோன்றினான் வாழியே *
சித்திரையிலாதிரை நாள் சிறக்க வந்தோன் வாழியே *
சீர்பெரும்பூதூர் முனிவன் திருவடிகள் வாழியே. (௧௧)

## கூரத்தாழ்வான்.

சீராருந் திருப்பதிகள் சிறக்கவந்தோன் வாழியே *
தென்னரங்கர் சீருரைச் சேருமவன் வாழியே *
பாராருமெதிராசர் பதம்பணிந்தோன் வாழியே
பாடியத்தினுட் பொருளைப் பகருமவன் வாழியே *
நாராயணன்சமயம் நாட்டினான் வாழியே *
நாலூரான் றனக்குமுத்தி நல்கினான் வாழியே *
ஏராருந்தையிலத்தத்திங்கு வந்தான் வாழியே *
எழில்கூரத்தாழ்வான்றன் னிணையடிகள் வாழியே. (௧௨)

## முதலியாண்டான்.

அத்திகிரியருளாளர் அடிபணிந்தோன் வாழியே *
அருட்பச்சை வாரணத்தி லவதரித்தான் வாழியே *
சித்திரையில் புனர்பூசம் சிறக்கவந்தோன் வாழியே *
பாடியந்தன்னில் சீர்பெறுவோன் வாழியே *
உத்தமமாம் வாதூல முயரவந்தோன் வாழியே *
ஊர்திருந்துசீர்பாத மூன்றினான் வாழியே *
முத்திரையும் செங்கோலும் முடிபெறுவோன் வாழியே *
முதலியாண்டான் பொற்பதங்கள் ஊழிதொறும் வாழியே * (௧௩)

## திருவரங்கத்தமுதனார்.

எந்தாதைகூரேசரிணையடியோன் வாழியே *
    எழில் மூங்கிற்குடிவிளங்க விங்கு வந்தோன் வாழியே *
நந்தாமலெதிராசர் நலம்புகழ்வோன் வாழியே *
    நம்மதுரகவி நிலையை நண்ணினான் வாழியே *
பைந்தாமவரங்கர்பதம் பற்றினான் வாழியே *
    பங்குனியிலத்தநாள் பாருதித்தோன் வாழியே *
அந்தாதி நூற்றெட்டு மருளினான் வாழியே *
    அணியரங்கத்தமுதனா ரடியிணைகள் வாழியே. (கச)

## எம்பார்.

பூவளரும் திருமகளார் பொலிவுற்றான் வாழியே *
    பொய்கை முதல் பதின்மர் கலைப்பொருளுரைப்போன் வாழியே *
மாவளரும்பூதூரன் மலர்ப்பதத்தோன் வாழியே *
    மகரத்தில் புனர்பூசம் வந்துதித்தான் வாழியே *
தேவுமெப் பொருளுமதில் திருந்தினான் வாழியே *
    திருமலை நம்பிக்கடிமை செய்யுமவன் வாழியே *
பாவையர்கள் கலவியிருள் பகலென்றான் வாழியே *
    பட்டர்தொழுமெம்பார் பொற்பதமிரண்டும் வாழியே, (கரு)

## (பட்டர்.)

தென்னரங்கர் மைந்தனெனச் சிறக்கவந்தோன் வாழியே *
    திருநெடுந்தாண்டகப் பொருளைச் செப்புமவன் வாழியே *
அன்னவயல்பூதூர னடிபணிந்தோன் வாழியே *
    அநவரதமெம்பாருக் காட்செய்தோன் வாழியே *
மன்னுதிருக்கூரனார் வளமுரைப்போன் வாழியே *
    வைகாசியனுடத்தில் வந்துதித்தான் வாழியே *
பன்னுகலைநால்வேதப் பயன் தெரிவோன் வாழியே
    பராசரனாம் சீர்பட்டர் பாருலகில் வாழியே. (கசு)

## நஞ்சீயர்.

தெண்டிரைசூழ்திருவரங்கம் செழிக்கவந்தோன் வாழியே *
    சீமாதவனென்னும் செல்வனார் வாழியே *
பண்டைமறைத்தமிழ்ப்பொருளைப் பகரவந்தோன் வாழியே *
    பங்குனியிலுத்தரநாள் பாருதித்தான் வாழியே *
ஒண்டொடியாள்கலவிதன்னை யொழித்திட்டான் வாழியே *
    ஒன்பதினாயிரவுரையை யோதுமவன் வாழியே *
எண்டிசையும்சீர்பட்ட ரிணையடியோன் வாழியே *
    எழில்பெருகும்நஞ்சீய ரினிதூழி வாழியே. (கஎ)

## நம்பிள்ளை.

தேமருவும்செங்கமலத் திருத்தாள்கள் வாழியே *
    திருவரையில்பட்டாடை சேர்மருங்கும் வாழியே *
தாமமணிவடமார்வும் புரிநூலும் வாழியே *
    தாமரைக்கையிணையழகும் தடம்புயமும் வாழியே *
பாமருவுந்தமிழ்வேதம் பயில்பவளம் வாழியே *
    பாடியத்தின்பொருள்தன்னைப் பகர்நாவும் வாழியே *
நாமநுதல்மதிமுகமும் திருமுடியும் வாழியே *
    நம்பிள்ளைவடிவழகு நாடோறும் வாழியே. (கஅ)

காதலுடன்நஞ்சீயர் கழல்தொழுவோன் வாழியே *
கார்த்திகைக்கார்த்திகையுதித்த கலிகன்றி வாழியே *
போதமுடனாழ்வார் சொற்பொருளுரைப்போன் வாழியே *
பூதூரன்பாடியத்தைப்புகலுமவன் வாழியே *
மாதகவாலெவ்வுயிர்க்கும் வாழ்வளித்தான் வாழியே *
மதிளரங்கரோலக்கம் வளர்த்திட்டான் வாழியே *
நாதமுனியாளவந்தார் நலம்புகழ்வோன் வாழியே *
நம்பிள்ளை திருவடிகள் நாடோறும் வாழியே. (உகூ)

## வடக்குத்திருவீதிப்பிள்ளை.

ஆனிதனிற்சோதிநா ளவதரித்தான் வாழியே *
ஆழ்வார்கள்கலைப்பொருளை யாய்ந்துரைப்போன் வாழியே *
தானுகந்தநம்பிள்ளை தாள்தொழுவோன் வாழியே *
சடகோபன்தமிழ்க் கீடு சாற்றினன் வாழியே *
நானிலத்திற்பாடியத்தை நடத்தினன் வாழியே *
நல்லுலகாரியனை நமக்களித்தான் வாழியே *
ஈனமறவெமையாளு மிறைவனார் வாழியே *
எங்கள்வடவீதிப்பிள்ளை யிணையடிகள் வாழியே * (உ0)

## பிள்ளைலோகாசாரியர்.

அத்திகிரியருளாள ரனுமதியோன் வாழியே *
ஐப்பசியிற்றிருவோணத் தவதரித்தான் வாழியே *
முத்திநெறிமறைத்தமிழால் மொழிந்தருள்வோன் வாழியே *
மூதறிவமணவாளன் முன்புதித்தான் வாழியே *
நித்தியம்நம்பிள்ளைபதம் நெஞ்சில்வைப்போன் வாழியே *
நீள்வசனபூடணத்தால் நியமித்தான் வாழியே *
உத்தமமாம்முடும்பைநக ருதித்தவள்ளல் வாழியே *
உலகாரியன்பதங்களூழிதொறும் வாழியே. (உக)

## திருவாய்மொழிப்பிள்ளை.

வையகமெண்சடகோபன் மறைவளர்த்தோன் வாழியே *
வைகாசிவிசாகத்தில் வந்துதித்தான் வாழியே
ஐயன்அருண்மாரிகலை யாய்ந்துரைப்போன் வாழியே *
அழகாருமெதிராச ரடிபணிவோன் வாழியே *
துய்யவுலகாரியன் தன் துணைப்பதத்தோன் வாழியே *
தொல்குருகாபுரியதனைத் துலக்கினன் வாழியே *
தெய்வநகர்குந்திதன்னில் சிறக்கவந்தோன் வாழியே *
திருவாய்மொழிப்பிள்ளை திருவடிகள் வாழியே. * (உஉ)

## மணவாளமாமுனிகள்.

இப்புவியிலரங்கேசர்க் கீடளித்தான் வாழியே *
எழில்திருவாய்மொழிப்பிள்ளை யிணையடியோன் வாழியே *
ஐப்பசியிற்றிருமூலத் தவதரித்தான் வாழியே *
அரவரசப்பெருஞ்சோதி யனந்தனென்றும் வாழியே *
எப்புவியும்சீசைல மேத்தவந்தோன் வாழியே
எராருமெதிராசரெனவுதித்தான் வாழியே *
முப்புரிநூல்மணிவடமும் முக்கோல்தரித்தான் வாழியே *
மூதறிவன்மணவாள மாமுனிவன் வாழியே. (உ௩)

செந்தமிழ்வேதியர்சிந்தைதெளிந்து சிறந்துமகிழ்ந்திடுநாள் *
சீருலகாரியர்செய்தருணற்கலைதேசுபொலிந்திடுநாள் *
மந்தமதிப்புவிமானிடர்தங்களை வானிலுயர்த்திடுநாள் *
மாசறுஞானியர்சேரெதிராசர்தம் வாழ்வுமுளைத்திடுநாள் *
கந்தமலர்ப்பொழில்சூழ்குருகாதிபன் கலைகள்விளங்கிடுநாள் *
காரமர்மேனியரங்கநகர்க்கிறை கண்கள்களித்திடுநாள்
அந்தமில்சீர்மணவாளமுனிப்பரனவதாரஞ்செய்திடுநாள் *
அழகுதிகழ்ந்திடுமைப்பசியிற்றிருமூலமதெனுநாளே. (உ௬)

வாழித்திருநாமம் முற்றும்.

---

## மணவாளமாமுனிகள் நிபந்தித்தருளிய இயல்சாத்து.

நன்றுந்திருவுடையோம் நானிலத்திலெவ்வுயிர்க்கும் *
ஒன்றுங்குறையில்லை ஓதினோம் *—குன்றம்
எடுத்தானடிசேரிராமானுசன்தாள் *
பிடித்தார்பிடித்தாரைப்பற்று. (௧)

வாழி திருக்குருகூர் வாழிதிருமழிசை *
வாழி திருமல்லிவளநாடு *—வாழி
சுழிபொறித்தநீர்ப்பொன்னித்தென்னரங்கன்தன்னை *
வழிபறித்தவாளன்வலி. (௨)

திருநாடுவாழி திருப்பொருநல்வாழி *
திருநாட்டுத்தென்குருகூர்வாழி *—திருநாட்டுச்
சிட்டத்தமர்வாழி வாழிசடகோபன் *
இட்டத்தமிழ்ப்பாவிசை. (௩)

மங்கைநகர்வாழி வண்குறையலூர்வாழி *
செங்கையருண்மாரிசீர்வாழி *—பொங்குபுனல்
மண்ணித்துறைவாழி * வாழிபரகாலன்
எண்ணில்தமிழ்ப்பாவிசை. (௪)

வாழியரோதென்குருகை வாழியரோதென்புதுவை *
வாழியரோதென்குறையல்மாநகரம் *—வாழியரோ
தக்கோர்பரவுந்தடஞ்சூழ்பெரும்பூதூர் *
முக்கோல்பிடித்தமுனி. (௫)

மொழியைக்கடக்கும்பெரும்புகழான் * வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்குங்கூரத்தாழ்வான்சரண்கூடியபின் *
பழியைக்கடத்துமிராமானுசன்புகழ்பாடியல்லா
வழியைக்கடத்தல் * எனக்குஇனியாதும்வருத்தமன்றே. (௬)

நெஞ்சத்திருந்துநிரந்தரமாகநிரயத்துய்க்கும் *
வஞ்சக்குறும்பின்வகையறுத்தேன் மாயவாதியர்தாம்
அஞ்சப்பிறந்தவன்சீமாதவனடிக்கன்புசெய்யும் *
தஞ்சத்தொருவன்சரணாம்புயமென்தலைக்கணிந்தே. (௭)

ஊழிதொறும்ஊழிதொறும்உலகையுய்ய
உம்பர்களும்கேட்டுய்ய * அன்பினாலே
வாழியெனும்பூதம்பேய்பொய்கைமாறன்
மழிசையர்கோன்பட்டர்பிரான்மங்கைவேந்தன் *
கோழியர்கோன்தொண்டர்துகள்பாணன்கோதை
குலமுனிவன்கூறியநூலோதி * வீதி
வாழியெனவருந்திரளைவாழ்த்துவார்தம்
மலரடிஎன்சென்னிக்குமலர்ந்தபூவே. (அ)

இயல்சாத்து முற்றிற்று.

சாத்து முறை.

ஸர்வதேசதசாகாலேஷ்வவ்யாஹதபராக்ரமா -
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம்.
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்ஜ்வலா -
திகந்தவ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோகஹிதைஷிணீ.
ஸ்ரீமந் ஸ்ரீரங்கஸ்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய -
ஸ்ரீமந் ஸ்ரீரங்கஸ்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய.
நம: ஸ்ரீசைலநாதாய குந்தீநகரஜந்மநே -
ப்ரஸாதலப்தபரமப்ராப்யகைங்கர்யசாலிநே.
ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் -
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.
வாழிதிருவாய்மொழிப்பிள்ளைமாதகவால்
வாழும்மணவாளமாமுனிவன் *—வாழியவன்
மாறன்திருவாய்மொழிப்பொருளை * மாநிலத்தோர்
தேறும்படியுரைக்குஞ்சீர்.
செய்யதாமரைத்தாளிணைவாழியே சேலைவாழி திருநாபிவாழியே *
துய்யமார்பும்புரிநூலும்வாழியே சுந்தரத்திருத்தோளிணைவாழியே *
கையுமேந்தியமுக்கோலும்வாழியே கருணைபொங்கியகண்ணிணைவாழியே *
பொய்யிலாதமணவாளமாமுனி புந்திவாழி புகழ்வாழி வாழியே.
அடியார்கள்வாழ அரங்கநகர்வாழ *
சடகோபன்தண்டமிழ்நூல்வாழ *—கடல்சூழ்ந்த
மன்னுலகம்வாழ * மணவாளமாமுனியே! *
இன்னுமொருநூற்றாண்டிரும்.

நித்தியாநுஸந்தானம்
முற்றிற்று.

1 to 22 Forms printed at The Model Press, Godown Street G. T., Madras.